# ॥ मनीषापञ्चकम् ॥

# மநீஷா பஞ்சகம்

(1)

जाग्रत्स्वप्नसुषुप्तिषु स्फुटतरा या संविदुज्जृम्भते
या ब्रह्मादिपिपीलिकान्ततनुषु प्रोता जगत्साक्षिणी ।
सैवाहं न च दृश्यवस्त्विति दृढप्रज्ञापि यस्यास्ति चे –
चाण्डालोऽस्तु स तु द्विजोऽस्तु गुरुरित्येषा मनीषा मम ॥

ஜாக்ரத்ஸ்வப்நஸுஷுப்திஷு ஸ்புடதரா யா ஸம்
வித்உஜ்ரும்பதே
யா ப்ரஹ்மாதிபிபீலிகாந்த தநுஷு ப்ரோதா
ஜகத்ஸாக்ஷிணீ ।
ஸைவாஹம் ந ச த்ருச்யவஸ்த்விதி த்ருடப்ரஜ்ஞாபி
யஸ்யாஸ்தி சேத்
சாண்டாலோऽஸ்து ஸ து த்விஜோऽஸ்து குரு
ரித்யோஷா மநீஷா மம ॥

ஜாக்ரத் - ஸ்வப்ன - ஸுஷுப்தி நிலைகளில் தெளிவாக எந்த ஒரு ஜ்நானம் உண்டாகிறதோ, ப்ரம்மா முதல் எறும்பு வரையிலானவற்றின் உடலில் நெருங்கி உலகத்தின் ஸாக்ஷியாக எந்த ஜ்ஞானம் உள்ளதோ அதுவேதான் நான் - 'காணும் பொருளல்ல' என்று உறுதியான ஜ்ஞானம் எவனுக்கு உள்ளதோ அவன் சண்டாளராக இருந்தாலென்ன பிராமணராயிருந்தாலென்ன, அவனே சிறந்தவன் என்று நான் கருதுகிறேன்.

(2)

ब्रह्मैवाहमिदं जगच्च सकलं चिन्मात्रविस्तारितं
सर्वं चैतदविद्यया त्रिगुणयाऽशेषं मया कल्पितम् ।
इत्थं यस्य दृढा मतिः सुखतरे नित्ये परे निर्मले
चाण्डालोऽस्तु स तु द्विजोऽस्तु गुरुरित्येषा मनीषा मम ॥

ப்ரஹ்மைவாஹம் ஜகத் ச ஸகலம் சின்மாத்ரவிஸ்தாரிதம்
ஸர்வம் சைததவித்யயா த்ரிகுணயாடசேஷம்
மயா கல்பிதம் ।
இத்தம் யஸ்ய த்ருடா மதி: ஸுகதரே நித்யே பரே நிர்மலே
சாண்டாலோடஸ்து ஸதுத்வஜோடஸ்து
குருரித்யேஷா மநீஷா மம ॥

ப்ரஹ்மமும் நானும் ஒன்றே' - இந்த உலகம் முழுதும் ஜ்ஞானம் ஒன்றாலேயே பரந்துள்ளது - முக்குணம் நிரம்பிய மாயையால்தான் இதெல்லாம் என் கற்பனைக்குட்பட்டது. இவ்வாறு நித்யமான, நிர்மலமான, ஆனந்தமயமான பரம்பொருள் பற்றிய முடிவான ஜ்ஞானம் எவனுக்கு இருக்கிறதோ அவன் சண்டாளனாயினும், பிராம்மணனாயினும் சிறந்தவனே என்று கருதுகிறேன்.

(3)

शश्वन्नश्वरमेव विश्वमखिलं निश्चित्य वाचा गुरो –
नित्यं ब्रह्म निरन्तरं विमृशता निर्व्याजशान्तात्मना ।
भूतं भाति च दुष्कृतं प्रदहता संविन्मये पावके
प्रारब्धाय समर्पितं स्ववपुरित्येषा मनीषा मम ॥

சத்வத்நச்வரமேவ விச்வமகிலம் நிஸ்சித்ய வாசா குரோ:
நித்யம் ப்ரஹ்மநிரந்தரம் விம்ருசதா நிர்வ்யாஜ
சாந்தாத்மநா ।
பூதம் பாவி ச துஷ்க்ருதம் ப்ரதஹதா ஸம்வித்மயே
பாவகே
ப்ராரப்தாய ஸமர்பிதம் ஸ்வவபுரித்யேஷா
மநீஷா மம ॥

குரு உபதேசித்தபடி அகில உலகத்தையும் அழிவதாகவே தீர்மானித்து, காரணங்கொள்ளாதபடி அமைதி காணும் எவனொருவன் நித்யமான ப்ரஹ்மத்தை ஆராய்ந்து தெளிகிறானோ, ஜ்ஞானமாகிய தீயில் கடந்து போன - வரப்போகிற பாபமனைத்தையும் பொசுக்கிவிட்டு தற்போது நிலவிலுள்ளவற்றிற்கு மட்டும் உடலை அர்பணித்து வருந்துகிறான் என்றே நான் கருதுகிறேன்.

(4)

या तिर्यङ्नरदेवताभिरहमित्यन्तः स्फुटा गृह्यते
यद्भासा हृदयाक्षदेहविषया भान्ति स्वतोऽचेतनाः।
तां भास्यैः पिहितार्कमण्डलनिभां स्फूर्तिं सदा भावय -
न्योगी निर्वृतमानसो हि गुरुरित्येषा मनीषा मम॥

யா திர்யங்நரதேவதாபி ரஹமித்யந்த: ஸ்புடா க்ருஹ்யதே
யத்பாஸா ஹ்ருதயாக்ஷ தேஹவிஷயா
பாந்திஸ்வதோऽசேதநா:।
தாம் பாஸ்யை: பிஹிதார்க மண்டலநிபாம் ஸ்பூர்திம்
ஸதா பாவயந்
யோகீ நிர்வ்ருதமானஸோ ஹி குரு,
ரித்யேஷாமநீஷா மம॥

திர்யக் ஜந்துக்களிடத்தும், மனிதர் - தேவர் முதலியோரிடத்தும் 'நான்' என்ற ஓர் உள்ளுணர்வுத் தெளிவாய் அறியப்படுகிறது. அந்த உள்ளுணர்வால், ஹ்ருதயம், இந்த்ரியங்கள், உடல் ஆகியவற்றில் அந்தந்த விஷயங்கள் அசேதநமாயிருந்து தெளிவாகின்றன. மேகம் முதலியவற்றால் மறைந்த சூர்யமண்டலம் போன்றிருக்கும் அந்த உள்ளுணர்வை எப்பொழுதும் தியானிக்கின்ற ஒரு யோகி செய்ய வேண்டியதை செய்து முடித்து விட்ட திருப்தியுடன் இருப்பானே அவனே சிறந்தவன் என நான் கருதுகிறேன்.

(5)

यत्सौख्याम्बुधिलेशलेशत इमे शक्रादयो निर्वृता
यच्चित्ते नितरां प्रशान्तकलने लब्ध्वा मुनिर्निर्वृतः।
यस्मिन्नित्यसुखाम्बुधौ गलितधीर्ब्रह्मैव न ब्रह्मविद् -
यः कश्चित्स सुरेन्द्रवन्दितपदो नूनं मनीषा मम॥

யத்ஸௌக்யாம் புதிலேசலேசத இமே சக்ராதயோ
நிர்வ்ருதா
யத்சித்தே நிதராம் ப்ரசாந்த கலநே லப்த்வா புனர்
நிர்வ்ருத: ।
யஸ்மின் நித்ய ஸுகாம்புதௌ கலித தீர்ப்ரஹ்மைவ
ந ப்ரஹ்மவீத்
ய:கஸ்சித்ஸ ஸுரேந்த்ர வந்திதபதோ நூநம்
மநீஷாமம ॥

அந்த ஆத்மானுபவ வாயிலாக தோன்றிய பேரானந் தத்தின் ஒருசிலத் துளிகளாலேயே இந்த்ரன் முதலியோர் பதவி பெற்று எக்களிக்கின்றனர். முனிவரும் வேறு எந்த எண்ணமும் இல்லாத சித்ததில் அவ் ஆத்மானந்தத்தைப் பெற்று அமைதி கொள்கின்றனர். மேலும் அந்த சாச்வதமான ஆத்மானந்தத்தில் திளைத்து மூழ்கிய புத்தியுடையவர். ப்ரஹ்மததை அறிந்தவர் என்பதைவிட ப்ரஹ்மமே ஆனவர் என்றே கூற வேண்டும். அவரே இந்த்ரன் முதலியோரால் போற்றிப் புகழத்தக்கவர் என்று நான் கருதுகிறேன்.

மநீஷா பஞ்சகம் முற்றிற்று

